# சிவாஜி

ஞாயிறு வெளியீடு

ஆசிரியர்கள்

திரு லோக சீதாராம் — அ. வெ. ர. கிருஷ்ணசாமி.


## சோழர் காலச் சிலை



முகலாயச் சக்ரவர்த்தி கைப்பட எழுதிவைத்த பாபர்நாமா ஏடுகளின் ஒரு பக்கத்தில் இருந்து எடுக்கப்பட்ட படம் இது. சோழர் காலத்து நடராஜர் சிலை. வெண்கலத்தால் ஆனது.

## கார்த்திகை மூலம் வந்தவர்

'சுராஜ்'

கார்த்திகை மூலம் வந்தவராம் - தமிழ்க்
கவிதை பலவும் தந்தவராம்
பார்த்தவர் வணங்கும் உருவினராம்-கவி
பாரதியென்ற பெயரினராம்!

தேசத்தைப் போற்றிப் பாடினராம் அதைத்
தெய்வமாகவே பேசினராம்
கூசிக்குறுகிய மாந்தர் தமைப் – பெரும்
குன்றென நிமிரச் செய்தவராம்!

கண்ணனுக்கேவல் இட்டவராம் - நல்ல
கண்ணம்மா வாகவே கண்டவராம்
பண்ணில் கோடி இன்பம் தரும்-தமிழ்ப்
பாடல் பலவும் தந்தவராம்!

காலனைக் காலால் உதைத்தவராம் - அவர்
காலத்தைவென்றுமே நிற்பவராம்!
கோல மாபெரும் சக்திக்கே-கவிக்
கோயில் கட்டி வணங்கினராம்!

9—12—56

இந்தியாவின் கலைக்கோயில்கள்

# வேல்ஸ் இளவரசர் பொருட்காட்சிச்சாலை பம்பாய்

பம்பாயில் ஒரு பொருட் காட்சிச் சாலையை ஏற்படுத்த வேண்டுமென்ற கருத்து 1892 லேயே ஏற்பட்டதாயினும், 1905ல் வேல்ஸ் இளவரசர் (ஐந்தாம் ஜார்ஜ்) தம்பதிகள் பம்பாய்க்கு விஜயம் செய்திராவிட்டால், இன்னும் பல காலத்துக்கு அது வெறும் கருத்தாகவே இருந்திருக்கும். இளவரசர் தம்பதிகள் விஜயத்தை எப்போதும் ஞாபகப் படுத்துவதற்குப் பொருட் காட்சிச் சாலை ஒன்றை ஏற்படுத்துவது உசிதமாக இருக்குமென்று அப்போது நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது. அப்படி ஏற்படுகிற பொருட்காட்சி சாலைக்கு மேற்கிந்திய,வேல்ஸ் இளவரசர் பொருட்காட்சி சாலை, என்று பெயரிடவும் முடிவு செய்யப்பட்டது. அம் முயற்சிக்காக பம்பாய் நகரப் பிரமுகர்கள் பலர் 9,12,00.0 ரூபாய் வசூலித்துத் தந்தார்கள். சர்க்கார் மனையிடம் வழங்கியது. அத்துடன் பம்பாய் நகரசபையுடன் சேர்ந்து நடப்புச் செலவுக்காக வருஷாந்திர மானியம் வழங்கவும் அவர்கள் ஒப்புக் கொண்டார்கள்.

1909ல் வேல்ஸ் இளவரசர் பொருட்காட்சிச்சாலைச்சட்டம் இயற்றப்பட்டது. அது சம்பந்தமான நிர்மாண,-நிர்வாக, பராமரிப்பு வேலை ஒரு தர்மகர்த்தா போர்டிடம் ஒப்படைக்கப்பட்டது. 1914ல் அதன் கட்டடம் மூன்று பகுதிகளாகக் கட்டி முடிக்கப்பட்டது. ஆனல் முதல் உலக யுத்தத்தின்போது அது ராணுவ ஆஸ்பத்திரியாக உபயோகிக்கப்பட்டது. 1921ல் தான் தர்மகர்த்தாக்களிடம் அது திரும்ப ஒப்படைக்கப் பட்டது.

காட்சிப் பொருள்களை வகைப்படுத்தி வைப்பது, அதற்கு வேண்டிய அலமாரி, பெட்டி, பேழை முதலியவைகளைத் தயாரிப்பது ஆகிய காரியங்களுக்குச் சிறிது காலம் பிடித்தது. 1922ல் காட்சிச்சாலை பொதுமக்கள் பார்வைக்குத் திறந்து வைக்கப்பட்டது.

புராதனக் கலைப் பிரிவில் பழையகால நாணயங்கள், சிலாசாஸனங்கள். பட்டயங்கள் முதலியவை இருக்கின்றன. சரித்திர முற்காலப் பகுதியில் கற்காலக் கருவிகள் மண்பாண்டங்கள், பாசி மணிகள், மண் பிரதிமைகள், முத்திரைகள் முதலியவை உள்ளன. அவை மொஹஞ்சதாரோ, ஹரப்பா நாகரிக காலச் சின்னங்கள். அவை தவிர அந்த நாகரிகத்தை எடுத்துக் காட்டுவதற்கு விசேஷ இயற்கைத் தோற்றக் காட்சி பெட்டி ஒன்றும் வைக்கப்பட்டிருக்கிறது, அதில் மொகஞ்சதாரோ கால மக்கள் வாழ்க்கை முறை நன்கு எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. மாணவர்கள் 4000 வருஷங்களுக்கு முன் வாழ்ந்த மக்களின் வாழ்க்கையைக் கற்பனை செய்து பார்ப்பதற்கு அது துணை செய்யும்,

காந்தாரா கலைப் பகுதியில் கிரேக்கோ-பௌத்தச் சிலைகள் உள்ளன. கி. பி. 1-வது 5-வது நூற்றாண்டு காலங்களுக்கு இடைப்பட்ட காலத்தியவை அவை. அவைகளில் புத்தர், போதிசத்வர்கள் ஆகியோர்களின் உருவச் சிலைகளும், அலங்காரக் கட்டட வேலைப் பகுதிகளும், புத்தர் வாழ்க்கைச் சரிதத்தை எடுத்துக் காட்டும் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ள பாளங்களும் இருக்கின்றன.

### பௌத்த சின்னங்கள்

சிந்துவிலிருந்து கொண்டு வரப்பட்ட பௌத்த சின்னங்களுள் மீர்பூரகத்தா குப்தஸ்தூபம் விசேஷ முக்கியத்துவம் வாய்ந்தது. கி. பி. 4-வது நூற்றாண்டுக்கால சின்னங்களில் புத்தரின் மண்பிரதிமை, வள்ளல் ஒருவர் நன்கொடை வழங்கும் உருவம், சித்திர வேலையுள்ள செங்கல்கள் முதலியவை குறிப்பிடத்தக்கவை அந்தச் சின்னங்கள் குப்தக் கலை மரபு குறுகிய காலத்துக்குள் எவ்வளவு விஸ்தாரமாகப் பரவி விட்டது என்பதை விளக்கிக் காட்டும்.

இந்திய வெண்கலச் சிலைகளுக்காக ஒரு தனிப்பிரிவு, இருக்கிறது. அதில் 9-வது 18-வது நூற்றாண்டுகால ஜைன சிலைகள் இருக்கின்றன அவைகளில் விசேஷமாகக் குறிப்பிடத் தக்கவை, 12ம் நூற்றாண்டுச் சோழ காலத்திய திருஞான சம்பந்தர் நடனத் திருக்கோலத்தில் உள்ள சிலையும், 9-10 நூற்றாண்டு கால மைசூர் பஹுபலி சிலையும் ஆகும். வெண்கலச் சிலை செய்வதில் இந்தியாவின் திறமையை விசேஷமாக எடுத்துக் காட்டும் சின்னம் அது.

மேற்கிந்தியா, தக்காணம் ஆகிய பிரதேசங்களிலிருந்து சிற்பங்கள் சேகரிக்கப்பட்டுள்ளன. ஐஹொலேயிலிருந்து சேகரிக்கப்பட்டவை மிக முக்கியமானவை. 6-வது நூற்றாண்டுக்கால சாளுக்கிய சிற்பக் கலைக்கு எடுத்துக் காட்டாக சிவ-பார்வதி, சேஷசயன விஷ்ணு, பிரும்மா ஆகியோர் சிலைகள் விளங்குகின்றன. 7வது நூற்றாண்டுக்கால வருணன் சிலை ஒரு அபூர்வச் சின்னமாகும். குஜராத்தைச் சேர்ந்த மத்தியகால சலவைக்கல் சிலைகளில் அலங்கார வேலைப்பாடு முக்கியமாகக் கவனிக்கப்பட்டிருக்கிறதே தவிர அங்க வளைவுகள் அதிகமாகக் கவனிக்கப்படவில்லை.

இந்த பொருட்காட்சிச்சாலையில் ஓவியப் பிரிவுதான் மிக முக்கியமான பிரிவாக இருக்கிறது. இந்திய, ஐரோப்பிய, சீன, ஜப்பானிய, திபேத்திய சித்திரங்கள் ஏராளமாகச் சேகரிக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளன. சீன பீங்கான், மண்பாண்டம், தந்தம் முதலிய பிரிவுப் பொருள்களும், ஜப்பானிய மெழுகு வேலைப் பொருள்களும், இந்திய ஜவுளி திபேத்திய, இந்திய உலோகப் பொருள்களும் இந்திய ஆயுதங்கள் முதலியவைகளும் காட்சிப் பொருள்களாக இருக்கின்றன.

### இந்திய ஓவியங்கள்

இந்திய ஓவியங்களில் சகல பிரிவுகளையும் சேர்ந்த ஓவியங்கள் உள்ளன. அஜந்தா சித்திரங்கள், 12வது நூற்றாண்டு காலத்திய ஏட்டுச் சுவடிகளில் உள்ள பாலர் காலச் சித்திரங்கள், 15-16 நூற்றாண்டுக் கால ஜைன சித்திர விளக்கப் புத்தகங்கள் முதலியவை இருக்கின்றன.

இந்திய, பாரஸீக கலை அம்சங்கள் இணைந்துள்ள மொகலாய ஓவியப் பிரிவுகள் எல்லாம் இடம் பெற்றுள்ளன. அக்பர் காலப் புத்தகச் சித்திரங்கள், விசேஷ வேலைப்பாடுள்ள உருவச் சித்திரங்கள் கொலு மண்டபக் காட்சிகள் விலங்குகள் பறவைகள். ஷாஜஹான் காலத்திய உரு

[11ம் பக்கம் பார்க்க]

# குடந்தையில் ராஜ்ய மிராசுதார்களின் மாநாடு

## அடிப்படையைத் தகர்க்கும் அவசர நிலச் சட்டங்கள்

### அரசியல் வாதிகளின் அலைக்கழிப்பு

சமீப காலத்தில் அரசாங்கத்தார் கொண்டுவந்துள்ள நில உரிமைச் சட்டங்களால் பாதிக்கப்பட்டிருக்கும் இந்த ராஜ்ய மிராசுதார்கள் சுமார் மூவாயிரம் பேருக்குமேல் ஒன்றுகூடி, டிசம்பர் முதல் தேதியன்று கும்பகோணத்தில் மிகப் பெரிய மகாநாடு ஒன்றை வெற்றிகரமாக நடத்தி முடித்திருக்கிறார்கள். தமிழ் நாட்டின் சிறந்த அறிஞர்களும் தலைவர்களுமான சர். பி. டி. ராஜன். ஜி. டி. நாயுடு, ஆகிய இருவரும் இந்த மகாநாட்டில் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள். மாநாடு குடந்தை மீனாக்ஷி தியேட்டரில் நடைபெற்றது.

திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்தமிராசுதார் திருவாளர் நாராயணசாமி அய்யர் அவர்கள் மகாநாட்டுக்கு நாட்டின் பற்பல பாகங்களிலுமிருந்து விஜயம் செய்திருந்த மிராசுதார்களையும் தலைவர்களையும் வரவேற்றுப் பேசும்போது நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் கொண்டுவரப் பட்டிருக்கும் அலங்கோலத்தையும் அதனால் ஏற்பட்டுள்ள நிலைமையையும் மகாநாடு ஆராய்ந்து தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

மகாநாட்டைத் திறந்து வைத்த கோவைத் தொழில் அதிபர் திருவாளர் ஜி. டி. நாயுடு, மிகவும் விரிவாகவும் நுணுக்கமாகவும் நிலச் சீர்திருத்தச் சட்டங்களைப்பற்றி ஆராய்ந்து உருவான சில ஆலோசனைகளைக் கூறினார். மகாநாட்டுக்குத் தலைமைவகித்த சர். பி. டி. ராஜன் தமது தலைமை உரையில் மிராசுதார்கள் ஒன்றுபட்டு ஊக்கத்துடன் மாநாடு கூடியதைப் பாராட்டி, இனியும் நிலச் சுவான்தார்கள் வாளாவிருக்காமல் செயலில் ஈடுபடவேண்டிய அவசியத்தை வற்புறுத்தினர்.

பிற்பகல் மாநாட்டில் திருவாளர்கள் வல்சத்தரசு, சிவஞண்டித்தேவர், முத்துசாமித் தேவர், விவசாயி ஆசிரியர் வை. பாலசுப்பிரமணியம் ஸ்வாமிநதய்யர் ஆகியோர் பேசினார்கள். திவான்பகதூர் என். இராமஸ்வாமி அய்யர் நீண்டதொரு சொற்பொழி வாற்றுகையில். நில உடமையின் அடிப்படையையும், சமூக நீதி உணர்ச்சியின்கீழ் புதிய சட்டங்கள் இழைக்கும் அநீதியையும் உருக்கமாக எடுத்துரைத்து தீவிரமான நடவடிக்கை மேற்கொள்ளவேண்டுமென்று வற்புறுத்தினர். பின்னர் மாநாட்டில் அரியலூர் விபத்தில் உயிரிழந்த நல்லுயிர்களின் சாந்திக்காக அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

மிராசுதார்கள் ஒரு இயக்கமாகச் சேர்ந்து வலிமை வாய்ந்த ஒரு கட்சியாக அமைவதென்றும், அந்தக்கட்சியின் வேலை முறைகளையும் வரவிருக்கும் பொதுத் தேர்தலில் மிராசுதார்கள் போட்டியிட்டு சட்ட சபைக்குச் செல்வதற்குரிய வழிகளை ஆராய்வதென்றும் முடிவு செய்யப்பட்டது. இதற்காக நிறை வலிமைக் குழு ஒன்று பி. டி. ராஜன் அவர்கள் தலைமையில் அமைக்கப்பட்டது. இந்தக் கமிட்டியில் பிரபல மிராசுதார்கள் பலரை அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது, இந்தக் குழுவினர் தனியே கூடி மேல் நடவடிக்கைக்கான சாத்தியக் கூறுகளை ஆலோசித்து முடிவு செய்வதென்றும், ஜனவரி முதல் வாரத்தில் மகாநாட்டை மறுபடியும் கூட்டி இறுதியாக நடவடிக்கைகள் எடுப்பதென்றும் முடிவு செய்யப்பட்டது.

#### திறப்புரை.

ஜி. டி. நாயுடு அவர்கள் ஆற்றிய மாநாட்டுத் திறப்புரையின் சாரம்:—

நிலச் சீர்திருத்தச் சட்டம் மசோதாவாக இருந்த காலத்தில் தக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டு, சமூகப் பொருளாதார அமைப்பை இந்தச் சட்டம் எவ்விதம் சீர்குலைக்குமென்ற உண்மையை அரசாங்கம் உணருமாறு செய்ய மிராசுதார்கள் தவறிவிட்டார்கள். கடைசி நிமிஷத்தில் அவசரம் அவசரமாக எண்ணற்ற விண்ணப்பங்களும் அறிக்கைகளும் தூதுகோஷ்டிகளும் சென்று எடுத்துக்காட்டிய உண்மைகள் கானகத்தில் போட்ட கூச்சல்போல் முடிந்துவிட்டது.

இன்று இங்கே காண்பது போன்ற ஒற்றுமை உணர்ச்சியும் இதுவரை மிராசுதார்களிடம் தோன்றியிருக்கவில்லை.

உழைக்கும் மக்களை உதாசீனம் செய்த ஒரு சில மிராசுதார்கள் இருந்திருக்கலாம் என்பது உண்மைதான். ஆனால் இன்று உழைப்பாளிகளுடனும் அரசாங்கத்தாருடன் ஒத்துப்போக விரும்பும் மிராசுதார்களே பெரும்பாலோர் என்பதில் ஐயமில்லை.

நெடுங்காலம் உழைப்பாளிகளின் நலன் புறக்கணிக்கப்பட்டு வந்ததும் அவர்களுக்கு கதிமோட்சம் இல்லாமல் இருந்து வந்ததும் உண்மையாக இருக்கலாம். இதன் காரணமாகச் சலிப்புற்றிருந்த விவசாயிகளைத் தங்கள் தேர்தல் சூழ்ச்சிகளுக்குப் பலியாக்கிக் கொள்ளும் வாய்ப்பு அரசியல் கட்சிகளுக்குக் கிடைத்துவிட்டது இயல்புதான்.

இந்தச் சட்டம் விதையாக இருந்தபோதே நடவடிக்கை எடுக்கத் தவறிவிட்டார்கள் மிராசுதார்கள். அப்படி எடுத்திருந்தால் நிலைமை முற்றிலும் வேறாக இருந்திருக்கலாம், இப்பொழுது இந்த விதை அரசியல் வாதிகளாலும் விவசாய உழைப்பாளிகளாலும் போஷிக்கப்பட்டு சட்ட சபை அங்கத்தினர்களின் மூலமாக வேர்கொண்டு அரசாங்கத்தாரின் அதிகாரத்தால் பெரிய விருட்சமாகிவிட்டிருக்கிறது. நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இந்த மரத்தின் கனியை நாம் புசிக்கவேண்டியிருக்கிறது.

நல்லதோ கெட்டதோ—ஒரு சட்டம் என்று ஆகிவிட்டால்—அதை மீறும்படி யாரும் யோசனை சொல்லமாட்டார்கள், ஆனால் இந்தச் சட்டம் இன்னும் இரண்டு மூன்று ஆண்டுகளில் எத்தகைய நிலைமையை உண்டாக்கும் என்பதைச் சொல்லாமல் இருக்க முடியாது.

இந்தச் சட்டம் விவசாய உலகில் ஒரு பிற்போக்கான நடவடிக்கை. பரஸ்பரப் பகைமை அசமாதானம், அதிருப்தி இவையே இதன் விளைவுகளாக இருக்கும். படிப்படியாக உற்பத்தி குறைந்து போவதுடன் 5 அல்லது 6 ஆண்டுகளுக்கு முன்பிருந்ததைவிடக் கொடிய பஞ்சத்துக்கே இது வழிகோலும். முன்பு வந்த உணவுப் பஞ்சத்தை நமது கூட்டு முயற்சியால் ஒருவாறு சமாளிக்க முடிந்தது. இந்த மசோதா தலைகாட்டியதிலிருந்தே இத்தகைய ஒற்றுமை முயற்சி குறையத் தொடங்கி விட்டது. இன்னும் இரண்டு மூன்று வருடங்களில் உழைப்பாளிகளின் பால் தோற்றுவிக்கப்படும் அசிரத்தையினாலும், சோம்பரினாலும், உற்பத்தி அறவே குறைந்துபோய் பஞ்சமே மிஞ்சும். இதுகாறும் விவசாய உழைப்பாளிகளைப் புறக்கணித்து வந்துள்ள மிராசு மனப்பான்மை, உழைப்பாளிகளின் போக்கு, அரசியல் கட்சிகளின் ஆர்ப்பாட்டம் அரசாங்க நிர்வாக யந்திரத்தின் நிலைமை இவற்றையெல்லாம் எண்ணிப் பார்க்கும்போது எதிர்காலத்தைப் பற்றி வேறெதுவும் கருத முடியவில்லை.

மசோதா சட்டமாகி விட்ட இந்த நிலையில் அதைத் தடுத்து நிறுத்தி விடுவது என்பது அவ்வளவு எளிதல்ல. ஏனென்றால் அரசாங்கப் பொறுப்பில் உள்ள பலருக்கு, உண்மையில் நில விவகாரம்பற்றிய அடிப்படைகளே தெரியவில்லை. அரசாங்கத்திலும் அவர்களின் கமிட்டிகளிலும், அனுபவ ஞானம் உள்ள ஒரு சிலர் இருக்கலாமென்றாலும் அவர்கள் மிகவும்சிறுபான்மை

[5ம் பக்கம் பார்க்க]

கும்பகர்ணனைப் போல தூங்கிக் கொண்டிருக்கும், அணுஹைட்ராஜன் குண்டுகளை தட்டியெழுப்பி யுத்தத்திற்கு அவைகளை அனுப்ப சந்நித்தமான உலகம், ஏதோ நியாய உணர்ச்சி பெற்றுவிட்டதைப் போன்று, அவ்விரண்டையும், தூங்கவைத்து விட்டன. இதுபொழுதிற்கு நம் தலைமீது விழுந்து உலகை அழிக்க உள்ள அவ்விரு இயம தூதர்கள் உறங்கவிடப்பட்டுள்ளார்கள். நாம் மகிழ்ச்சி கொள்வோம். அந்த தூதர்களின் உறக்கம்விடியா உறக்கமாக மாற இறைவனைப் பிரார்த்திப்போம். நாம் நம் நலத்தையே அறியாதவர்கள். இறைவன் முற்றாய நலத்தை அறிபவன் வகுப்பவன், அவன் அருள்வழி நிகழ்ச்சிகள் செல்லும். அவன் அருளைப் பெற முயல்வதன்றி செய்வதொன்றுமில்லை.

இன்று அவ்விரு யம தூதர்களை உறங்க அனுப்பியது, இறைவனருள் அல்ல, ஐக்கிய நாட்டு சபையின் விவாதங்கள், உலகில் நியாயம் வகுக்கும் அரசியல்வாதிகள் என்று கொண்டு அவர்களையே நாம் அவ்விரு குண்டுகளையும், யுத்தங்களையும் நிறுத்தி விடுங்கள் என்று பிரார்த்திப்பதிலும் பிழையில்லை. ஆயின் அவர்கள் அவ்வாறு செய்யக் கூடியவர்களாகவும், சிறுபொழுதிற்குக் காட்டிய நியாய உணர்ச்சியை என்றும் பற்றி நிற்பவர்களாகவும் காணப்படுவதில்லை. பித்தனொருவன் முறையானதொன்றைச் செய்யவும் சொல்லவும் தேருவதைப் போன்று இன்றைய ஐக்கிய நாட்டு சபையின் முயற்சியும் இருப்பதாகலாமென்றே தோன்றுகிறது. சமாதானம், நியாயம், இவைகளை நிலை நாட்டவேண்டிய

# உலகின் போக்கு

**சிவசுப்ரமணியன்**

நேர்மை அங்கு உள்ளவர்களிடம் தேடி முயன்றாலும் காணக் கிடைப்பதில்லை. இவ்வாறு சொல்வது கடுமையாகப்படலாம். ஆயின் அந்நியாயம் உள்நாட்டு விவகாரங்களிலும் கையாளப்படுவதில்லை. சர்வதேச விவகாரங்களிலும் கையாளப்படுவதில்லை, நியாயம் என்பது அவரவர்கள் சுய நலத்தைப் பெருக்குமளவில் விரிவடைகின்றது. சுதந்திரமென்பது பிறர் நலத்தையழிக்குமளவிற்கும் விரிந்துவிடுகின்றது. பரஸ்பர சகிப்பு என்பது வாயளவில். வேண்டாதவைகளை பயனற்றவைகளை-விட்டுக் கொடுக்கவே மனம் விரிகின்றது. சகோதரத்துவம் தன்னகத்தையைத் தாண்டிச் சென்றாலும் நாட்டின் எல்லையைக் கடந்து செல்வதில்லை. வலிவற்றவனைதைப் பற்றுதலும், அவனை மடக்குதலும் நியாயத்துடன் ஏன் பொருந்தாதென்ற சந்தேகம். இவைகளுடன், நேர்மை பொருந்துவது கூடுமா? ஆயின் நேர்மை அணிவகுப்பாக அனைவரும் அமைகின்றார்கள்.

சூயஸ் ஒருஉலக நீர்ப்பாதை, எகிப்து எல்லையில் உள்ளது. ஆங்கில பிரஞ்சு கம்பெனிகளால் - வெட்டப்பட்டது முதல் நிர்வகிக்கப்பட்டது எகிப்தியர் அதன் நிர்வாகத்தை தாமே ஏற்றனர். அதன் வருமானத்தைக் கொண்டு தங்கள் நாட்டு நீலநதியின் அணையை வலுப்படுத்த திட்டமிட்டனர். ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரர்களும், அதை விரும்பவில்லை. அதை உலக கண்காணிப்பில் வைக்க விரும்பினர். இடையே எகிப்திற்கு வடக்கே இஸ்ரேயில் என்ற ஒரு யூத நாடு 1920ம் வருஷ சமாதானத்திற்குப்பின் நிறுவப்பட்டுள்ளது. அதுசுற்றியுள்ள இஸ்லாமிய நாடுகளைப் பகைக்கின்றது. அவைகளும் அதை ஒழித்துக்கட்ட முயன்றே வருகின்றார்கள். இஸ்ரேலிய கப்பல்களை சூயஸ் வழிவிட எகிப்து மறுக்கவும், அது எகிப்தின் மீது படையெடுத்தது. எகிப்தும், இஸ்ரேயிலும் மோதிக்கொண்டு சூயஸ் கால்வாயை அழிக்காமல் பார்த்துக் கொள்ள இங்கிலாந்தும் பிரான்சும் படைகளை யனுப்பி கால்வாயை கைப்பற்றின. கப்பல்களை மூழ்கடித்து கால்வாயைத் தூர்த்தன.

ஐக்கிய நாடுகளின் சங்கம், ஆங்கிலேயர், பிரான்சு, இஸ்ரேலியர் இம்மூவரும் செய்தது ஆக்ரமிப்பு, யுத்தத்தை நிறுத்த வேண்டுமென்று தீர்மானித்தது. மூவரும் அதற்குக் கட்டுப்பட்டனர். ஐக்கிய நாட்டுப் படையை அனுப்பத் தீர்மானித்து, பன்னாடுகளிலிருந்தும் வீரர்கள் வந்து இறங்கிக் கொண்டிருக்கின்றார்கள். ஆங்கிலப் பிரெஞ்சு படைகள் ஐக்கிய நாட்டுப் படைகளிடம் கால்வாயை ஒப்பிவித்து தம் நாடு திரும்பும் ருசிய நாடு மிகவும் கடுமையாக இம் மூவரின் ஆக்ரமிப்பைக் கண்டித்தது. தானும் படைகளை அனுப்பப் போவதாக மிரட்டியது. அம் மிரட்டலின் காரணமாக அம் மூவரும் யுத்த நிறுத்தம் செய்தார்களென்று கொள்பவருமுண்டு.

எகிப்தை இரக்ஷிக்க வந்த ருசியா, கிழக்கு ஐரோப்பிய நாடுகளை ஏற்கனவே பக்ஷித்துள்ளது. போலண்டு, கிழக்கு ஜெர்மனி, செகோஸ்லோவேகியா, பல்கேரியா, யூகோஸ்லேவியா, ருமேனியா என்ற நாடுகள், ருசியாவின் கைப்பொம்மைகளால் ஆளப்படும் 'சுதந்திர' நாடுகள். ஹங்கேரியாவில் மக்கள் புரட்சி உண்டாகியது. எகிப்தில் நியாயத்தை நிலை நாட்ட பாடுபட்ட ருசியா பெரும் படைகளை ஹங்கேரிக்கு அனுப்பி, மக்களை பல வழிகளிலும் வதித்து தன் ஆட்சியை நிறுவி, தன் படைகளை அணிவகுத்து நிறுத்துகின்றது. என்ன நியாயம்.

பஞ்ச சீலத்தைப் பாராட்டும் இந்திய அரசாங்கம், எகிப்தை தாக்கியவர்களை வன்மையாகக் கண்டித்தது. ஹங்கேரியைப்பற்றி மழுமழுப்ப ஆரம்பித்தது. ஆயின் நாட்டில் இப்போக்கிற்கு எதிர்ப்பு தோன்றவும், சர்க்கார், ருசியாவையும் முறையாகக் கண்டிக்கவே செய்தது. இதுவும் நியாயத்துடன் பொருந்தவேண்டும்.

இடையே பாகிஸ்தான் இஸ்லாமிய நாடுகளின் தலைமை தனக்கு கிட்டாதா? காஷ்மீரை மிரட்டி தம் எல்லையுடன் சேர்த்துக் கொள்ளக் கூடாதா என்று சிந்திக்கின்றது. உலகின் தலைமை, முதன்மை இவைகளைப்பெற இந்த கலவர நிலையை முழுதும் பயன்படுத்தாதவர் இல்லை. அவர்களது கனவுகளும், நனவுகளும் எல்லாம் வீணாம். இறைவனே உலகிற்குத் தலைவன், அவனே முதன்மைக்கும் உரியவன் என்பதை நாம் அணித்தே தெளிவாகக் கற்றுக் கொள்வோம். இந்நிகழ்ச்சிகள் ஐக்கிய நாட்டுச் சங்கம், அலங்கார மண்டபங்களில், ஆடம்பர விவாதங்களைச் செய்வதும், தத்துவ வாதங்களை மேற்கொள்வதும் எல்லாம், மாணவர் மன்றங்களினும் பயனற்றது என்பதை விளக்க வில்லையா, ஐக்கிய நாட்டுத் தீர்மானங்களை ஏற்பவர் சிலர், புறக்கணிக்க அனைவரும் தயார், மழுப்புதல் கூடியவரை நடைபெறும். ருசியாவைப் போன்று அதைப் புறக்கணிப்போரும் உள்ளார்கள். இந்நிலையில் சங்கம் என்ன செய்யக்கூடும். உலக அரசியல் வாதிகள் ஒய்யார யாத்திரையும், அலங்காரப் பேச்சும் உலகை சரியமைத்து விடுமா?

உலகில் பல நாடுகளும் தங்கள் படைகளைப் பெருக்குகின்றன. ஆயுதங்களை சேமிக்கின்றன. யுத்த தளங்களைத் தயாரிக்கின்றன. ஐக்கிய நாட்

(10ம் பக்கம் பார்க்க)

[3ம் பக்கத் தொடர்ச்சி]

யோராக இருக்கிருர்கள். அவர்கள் கூறுவதுயார் செவியிலும் ஏருது. எனினும் இந்த மாநாட்டுக்கு விஜயம் செய்துள்ள அறிஞர்கள் ஒன்று கூடி—சரியான நடவடிக்கை மேற்கொண்டு உள்ள நிலையை விளக்கிக் காட்டி அரசாங்கத்தாரின் அறிவுக்கு விளங்குமாறு செய்தால் ஒரு வேளை ஏதாவது நற்பலன் ஏற்படலாம். அமைச்சர்கள் தங்கள் கருத்தை மாற்றிக் கொண்டு, வரவிருக்கும் தேர்தல் காலம் முடியும் வரையிலாவது சட்ட அமுலை ஒத்திப் போடுமாறு செய்ய முயற்சிக்கலாம். தேர்தலுக்குப் பின்னர் சம்பந்தப்பட்ட எல்லா நலன்களுக்கும் உகந்த ஒரு ஏற்பாட்டைச் செய்து கொள்ளலாம்.

மிராசுதார்களோ—விவசாயிகளோ—எல்லா மக்களின் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்த வேண்டுமென்ற எண்ணமும் முயற்சியும் அரசாங்கத்திற்கு இருக்கத்தான் செய்கிறது. ஆனல் அவசரமாக அவர்கள் கொண்டு வந்துள்ள இந்தச் சட்டத்தினல் மிராசுதார்களின் நிலைமை மட்டுமல்ல, உழைப்பாளிகள் ஏனைய பொதுமக்கள் ஆகியோரின் வாழ்வும் தாழ்ந்து போகு மென்பதைத்தான் உணர வேண்டும்.

மனித ராசியின் பரிணும சரித்திர உண்மையை இங்கே குறிப்பிட விரும்புகிறேன். முதன் முதலில் முரண்பட்டு நிற்றல் என்றமிருகப்பிராயம். அடுத்து சகிப்புத்தன்மை. மூன்ருவதாகக் கூடிப் பயிலுதல். நான்காவதாக ஒருமைப்பாடு. அதாவது அகில உலகமும் ஒரு குடும்பம் என்ற பண்பாடு.

கூடி வாழும் கொள்கையிலிருந்து ஒருமைப் பாட்டுக்கு உயர்ந்து செல்ல வேண்டிய சமூகத்திற்கு முரண்பாடு என்னும் மிருகப் பிராயத்துக்கு வழிகாட்டுகிறது இந்தச் சட்டம். குறிப்பாக விவசாயத் துறையில் இப்போது மிகவும் தேவைப்படுவது ஒருமைப்பாடுதான் என்ற உண்மையை உணர வேண்டும். முரண்பாடு அல்ல.

எந்த விவசாய சீர்திருத்தமும் அதிக உற்பத்தி ஒன்றையே அடிப்படையாகக் கொள்ள வேண்டும். இது ஒற்றுமையான முயற்சியால் இயலுமே அன்றி முரண்பாடுகளால் அல்ல. இந்தச் சட்டம் முரண்பாட்டையும் பின்னர் உற்பத்தியின்மையையும் உண்டாக்குமேயல்லாது கூட்டுறவை நோக்கி அடியெடுத்து வைக்கச் செய்யாது. முன்பு கூறியது போல இதன் விபரீத விளைவுகளை இரண்டு மூன்று ஆண்டுகளில் நாம் காண நேரிடும். இத்தகைய சட்டங்களால் மக்கள் பஞ்சத்தில் அடிபட வேண்டி வரும் போது அரசாங்கம் மக்களின் ஆதரவைப் பெறுவது எங்ஙனம்?

விவசாயக் கடன் வங்கிகளை அரசாங்கம் திறந்து கடன் வழங்கி வசூலிக்கலாம். ஆனல் இது உற்பத்தியைப் பெருக்குமென்பது என்ன நிச்சயம்? அரசாங்கத்தின் பற்பல தேசீய முன்னேற்றத் திட்டக் கணக்குகள், கிணறு வெட்டும் கடன்கள், பல்வேறு ஸ்தாபனக் கணக்குகளை அரசாங்கத்தார் ஆராய்ந்து பார்த்தால், எவ்வளவு செல்வத்தை வீணுக்கியும், விழலுக்கிறைத்தும், லஞ்சத்தை உற்பத்தி செய்து வந்திருக்கிருர்கள் என்பது நன்குவிளங்கும். அரசாங்கத்தார் ஈடுபடுத்தும் செல்வம் எப்போதுமே 37 சத விகிதம்தான் பலன் தருகிறதென்று முன்பொரு சமயம் கூறியிருக்கிறேன். அதுவும் தனியார் துறைகளில் ஈடுபடுத்திப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்ட இனங்களின் விளைவுதான் இது. எனவே இந்த அளவேனும் பயன் குலையாமல் இருக்க வேண்டுமானல் அவரவர் பொறுப்பில் நிலம் சுதந்திரமாக விடப்படுவது பயனுடையதாகும்.

முதல் ஆண்டில் வழங்கப்படும் கடன் சரியாக வசூலாகா விட்டால், அடுத்து வரும் ஆண்டுகளில் சர்க்கார் உதவி எந்த அளவு இருக்கு மென்பதை யார் சொல்ல முடியும்? இரண்டு, மூன்ருவது ஆண்டுகளில் எவ்வளவு குழப்பம் விளையும் என்பதை எண்ணிப் பாருங்கள். சமூகக் குழப்பத்தை சமாளிக்க ராணுவ உதவியைத் தேட வேண்டியதுதான். எந்த ஜனநாயக அரசாங்கம்தான் இத்தகைய செயல்களையும் விளைவுகளையும் விளம்பக் கூடும்?

பைகரா, மேட்டூர், மற்றும் பல இடங்களில் உற்பத்தியாகும் மின்சாரத்தை, முன் பணம் வாங்கிக்கொண்டு விநியோகிப்பதைப் போன்ற விஷயமல்ல இது அல்லது தபால் முத்திரைகளையோ, பத்திரங்களையோ ரொக்க விலைக்குக் கொடுக்கும் சங்கதியோ அல்ல. போக்குவரத்து யந்திரசாலை, அல்லது தொழிற்சாலையைப் போல, கட்டுப்பாடுகளின்கீழ் உழைப்பைப் பெற்றுப் பயன் விளைவிக்கும் காரியமும் அல்லஇது. மலைகள், பள்ளத்தாக்குகள், மேட்டு நிலங்கள், சமதரைகள் இப்படிப் பரவலாக மேல் கடலுக்கும் கீழ் கடலுக்கும் இடையில் சிந்திக் கிடக்கின்றது விவசாய பூமி. நிலச் சொந்தக்காரனின் அதிகார வரம்பிலிருந்து, உற்பத்திப் பொருளை விடுவித்து விட்டால் பின்னர் விளை பொருள் சேமிப்புக்கு நிலச் சுவான்தார்களின் ஒத்துழைப்பை நாட இடமில்லை. அதற்கு மாருக — பற்பல வெவ்வேறு அன்ருட நிர்வாகப் பொறுப்புகளில் தலையிட்டுக் கொண்டிருக்கும் சர்க்கார் பரந்து கிடக்கும் பெரிய நாட்டில் இத்தனை மக்களையும் தங்கள் பிடியில் கொண்டுவந்து உற்பத்தியைச் சேமித்து உருவாக்கி விட முடியுமென்பது நடவாத காரியம். இன்றைய உருவத்தில் இந்தக் கட்டத்தைக் கொண்டு வந்ததும், இதற்கு யோசனை சொன்னதும் யார் என்பது வேடிக்கையாக இருக்கிறது. இந்த சட்ட அமைப்பு ஜனநாயக பாணியில் அமையவே இல்லை. வாக்காளர்களின் தயவைப் பெறுவதன் பொருட்டு அவர்களைத் திருப்தி செய்வதாக எண்ணி சட்டங்களையும் விதிகளையும்

[8ம் பக்கம் பார்க்க]

## அமுதவாக்கு

தன்னை மறந்து சகல உலகினையும்
மன்னி நிதங்காக்கு மகாசக்தி — அன்னை
அவளே துணையென் றமைவெய்தி நெஞ்சம்
துவளா திருத்தல் சுகம்.

பாரதி.

# சிவாஜி

ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

மலர் 22 ] 9—12—56 [ வாரம் 1


## சீனர் உறவு

சீனா—புதிய சீனாவின் பிரதமர் இந்தியாவுக்கு வந்திருக்கிறார். அனாதி காலமாக-சமயம், கலாசாரம் சரித்திரம் ஆகிய அடிப்படை தொடர்புடைய அண்டை நாட்டின் பிரதமர் வருகைக்கு இந்தியா மகிழ்வடைகிறது. அன்னிய ஆக்ரமிப்பின் காரணமாக இந்த நாடுகள் இரண்டும் இடையில் பல நூற்றாண்டுகள் தங்கள் ஆன்ம சக்தி ஒளி குன்றிப் போன காரணத்தால் இவற்றின் தொடர்பும் இந்த நூற்றாண்டுகளில் துண்டித்துப் போயிருந்தது. சமீப காலத்தில் இவ்விரண்டு நாடுகளும் புத்துயிர் பெற்று விழித்தெழுந்து புது வாழ்வை ஒன்றாகவே தொடங்கிய காரணத்தில் மீண்டும் நம்மிடையே உறவு உணர்ச்சியும் மறுமலர்ச்சியடைந்திருக்கிறது. இது இயல்புதான்.

என்றாலும் இவ்விரண்டு நாடுகளின். அடிப்படைக் கொள்கையிலும் அழுத்தமான வேறுபாடு தெளிவாகக் காணப்படுகிறது. இந்தியாவின் வழி ஜனநாயக சுதந்திர உரிமையுடன் மக்கள் தாராளமாகச் சிந்திக்கவும், அஹிம்சை வழியில் ஆக்க வேலைகளைச் செய்யவும் சரிசமமான சந்தர்ப்பங்களைப் பெற்று இருக்கின்றோம். சீனாவிலோ கம்யூனிஸக் கொள்கையின் மீது எழுப்பப்பட்ட ராணுவக் கட்டுப்பாட்டின் கீழ் கட்டாயமான சமூகக் கோட்பாடுகள் வலிந்து திணிக்கப் பெற்று அவை வளர்க்கப் படுகின்றன.

ஆயினும் உலகசமாதானம், அந்தந்த நாடுகளின் தன்னிச்சையான சுதந்திர வாழ்வு என்ற அடிப்படையில் இவ்விரு நாடுகளுக்கும் வேறுபாடில்லை. அது மட்டுமின்றி இடைக் காலத்தில் தொழில் நுட்பம், விஞ்ஞானம் ஆகிய துறைகளில் பிற்பட்டுக்கிடந்த இவ்விரு நாடுகளும் இன்று வேகமாக இத்துறைகளில் முன்னேறவும் வேண்டியிருக்கிறது.

இவ்வகையில் சீனாவின் முன்னேற்றம் வியக்கத்தக்கதாக இருக்கிறது. சமூக ஒழுக்கம், கல்வி, பெண் கல்வி, தொழில் வளம், உணவு உற்பத்தி ஆகிய துறைகளில் மேலை நாடுகள் திகைக்கும் வண்ணம் புதிய சீனக் குடியரசு உயர்ந்துவிட்டது. இவ்வளவும் ஒரு சில வருடங்களில் என்பதை நாம் உணர வேண்டும்.

தொழில்' விஞ்ஞான, கல்வி விவசாயத் துறைகளிலும், சமூக உணர்ச்சியிலும் நாம் சீனாவிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டிய பல உண்மைகள் இருக்கின்றன. நமது ஜனநாயக சுதந்திர உரிமைகள் ராணுவ ஆட்சிக்கு அடிமையாகாமல் இத்தகைய முன்னேற்றங்களை சாதிப்பதற்கு என்னவழி என்பதை நாம் சிந்திக்க வேண்டும். புதிய சமுதாய அமைப்புக்கு சீனாவின் உதாரணத்தையும் அறிவையும் ஆற்றலையும் நாம் பயன் படுத்திக்கொள்ள இந்தியா - சீன உறவு அடிப்படையாக இருக்குமென்பதில் ஐயமில்லை.



## கணபதிராயன் பேசுகிறான்

சிவகுமாரன்

ரயில்வே மந்திரி ராஜினாமா செய்துவிட்டார்' எண்ணவே கூசும் முறையில் நிகழ்ந்துவிட்ட வெகு கோரமான ரயில் விபத்துக்குப் பிறகு அவர் ராஜினாமா கொடுத்திருக்கிறார், மஹ்பூப் நகர் விபத்தைத் தடுக்கும் பொருட்டு அறிவிப்புச் சங்கிலியைப் பிடித்திழுத்த தொழிற்சங்க நபர் மீது நடவடிக்கை எடுக்காமல் செய்யத் தம்மால் இயலாமற் போய்விட்டது என்று அவர் கூறியபோது அவர் ராஜினாமா செய்திருக்கவேண்டும் என்று நமக்குத்தோன்றியது. காலம் கடத்தியாயினும் நல்ல காரியத்தைச் செய்ததின்பொருட்டு அவரைப் பாராட்டலாம். ஜனநாயக ஆட்சியால் நேரிடைப் பொறுப்பு தமக்கில்லையென்று கூறி எந்தப் பிரதிநிதியும் தப்பித்துக்கொள்ள வழியிருக்கக்கூடாது. நல்லதொரு வழிகாட்டும் செயல் என்ற காரணத்தினால் ராஜினாமாவை ஏற்றுக்கொண்ட பிரதம மந்திரியையும் நாம் போற்றவேண்டும். மக்கள் ஆட்சியில் மந்திரிகள் ராஜினாமா செய்வது மட்டுமல்ல. மந்திரிகளை ராஜினாமா செய்யும்படிப் பிரதம மந்திரி கேட்கவும் வேண்டும். வரவு செலவுத் திட்டம் முன்கூட்டியே அம்பலமானபோதும், டெல்லியில் குடி தண்ணீரில் கழிவுநீர் கலந்தபோதும் இதே மாதிரி நடவடிக்கை நிகழ்ந்திருக்க வேண்டும். எப்படியானாலும் மந்திரியின் ராஜினாமா நல்லதொரு குடியரசு ஆட்சியின் பிரதிபலனம். அதாவது சாஸ்திரி ராஜதூதராகவோ, கவர்னராகவோ உடனடியாக நியமிக்கப்படாமலிருந்தால் மாத்திரம்.

சூயஸ் பிராந்தியத்தைவிட்டு முழுமையும் விலகுவது தமது உத்தேசம் இல்லையென்று கூறியிருக்கிறார் பிரிட்டிஷ் பிரதமர். இந்த அறிவிப்புக்குப் பிறகும் ஐ. நா. தூங்குமானால் அது உலக மன்றத்துக்கே அவமானம், ஒரு குறிப்பிட்ட கால வரையறையைத் தெரிவித்து அதற்குள் ஆக்கிரமிப்புப்படைகளை வெளியேறும்படி செய்வது உலக மன்றத்தின் கடமை. சீனத் துருப்புகளுக்கு எதிராகக் கொரியாவில் நடவடிக்கை எடுப்பது நியாயமானால் பிரிட்டிஷ்காரர்களுக்கு எதிராகவும நடவடிக்கை எடுக்கத் தயங்கக்கூடாது. ஆசியாவுக்கு ஒரு நீதி. ஐரோப்பாவுக்கு ஒரு நீதியா!

சிறு கதை இலக்கியத்தைக் குறித்து ருசிகரமான விவாதம் ஒன்று சுதேசமித்திரன் பத்திரிகையில் நிகழ்கிறது. மணிக்கொடிச் சிற்பிகளில் ஒருவரான சிறு கதை எழுத்தாளர் மணிக்கொடி யுகத்துக்குப் பின்பு சிறு கதை இலக்கிய வளர்ச்சியில் தேக்கம் கண்டுவிட்டது என்று கூறுகிறார். மணிக்கொடி வரிசையைச் சேராத, ஆனால் தமிழ் நெடுங்கதை வளர்ச்சியில் தனக்கெனத்தனிப்பாணியை வளர்த்துக்கொண்ட மற்றொரு எழுத்தாளர் முன்னவரின் கூற்றைப் பச்சைப் பொய் என்று கூறுகிறார். இருவர் கூற்றிலும் உண்மை இருக்கிறது என்பதுதான் கவனிக்க வேண்டிய விஷயம். எனினும் சிறு கதை இலக்கிய வளர்ச்சிக்காகப் பாடுபடுவதாகக் கூறிக்கொள்ளும் எந்த ஒரு பத்திரிகைக்கும் சில குத்தகைக்காரர்கள் இருக்கிறார்கள். ஒரு கதையைப் படித்தவுடன் இது எந்தப் பத்திரிகைக்கதை என்று கூறிவிட முடிகிறது என்பதும் உண்மை. இரு பெரியார்களும் குறிப்பிட

(7ம் பக்கம் பார்க்க)

(6 ம் பக்கத் தொடர்ச்சி)

மறந்துபோன ஒரு உண்மை. இன்றையச் சிறு கதை இலக்கியத்தில் எண்பது சதவிகிதம் அச்சுப் பிள்ளையார்கள் என்பது தான். கன்னடத்திலும் தெலுங்கிலும் வெளியாகும் சிறு கதைகளில் உள்ள நிலைக்களன்களாவது புதியனவையாக இருக்கின்றன. இது உண்மையிலேயே வருந்தத்தக்கதொரு செய்தி. எழுத்தாளர் உலகமே சிந்திக்கவேண்டியதொரு செய்தி.

சமீபத்தில் வெளியான ஆண்டு மலர்களைப் புரட்டிப் பார்த்தால் இந்த உண்மை தெளிவாகும். நல்ல பளபளப்பான காகிதத்தில், வண்ணப் படங்களோடு வெளியாகியிருக்கும் சிறு கதைகளைப் பார்க்கும்போது கனிவர்க்கங்களின் மீது உட்காரும் ஈக்களின் ஞாபகம்தான் வருகிறது. இதற்கு மாறாக அதிக ஆடம்பரமில்லாத சில ஆண்டு மலர்களும் சில வெளியாயின. அவற்றில் புதுக் கருத்துக்களுள்ள கதைகள் வெளியாயின: உண்மை சிந்தனைக் குரியது.

—•—

### அரியலூர் டி. மு. கோர்ட்

S. C. 1792/56

சின்னசாமி ரெட்டியார் —வாதி

(1) மூக்கன், (2) முத்தான், (3) அழகன், (4) செங்கான், (5) செல்லம்மாள், (6) சேலி, (7) வேலன் —பிரதிவாதிகள்

. 1 முதல் 4 பிரதிவாதிகளின் தகப்பனும், 5-ம் பிரதிவாதியின் புருஷனும், 6,7 பிரதிவாதிகளின் தமயனுமான இறந்த தெத்தி வாதிக்கு 10—6—54-ல். ரூ. 120-க்கு எழுதிக்கொடுத்த புரோநோட்டுப்படி • ரூ. 134 கிடைக்கதாவா செய்து ஷை கேசு ஷை கோர்ட்டில் 5-1-57-ல் ஈரங்கி போட்டிருக்கிறது. பிரதிவாதிகளுக்கு • ஆக்ஷேபணையிருந்தால் அன்று பகல் 10-மணிக்கு ஆஜராகி தெரிவித்துக் கொள்ளலாம்.

T. S. வெங்கட்டராமன்,
வாதி அட்வகேட்.

### தொழில் நுட்ப ஆலோசகர்கள் நியமனம்

நங்கல் ரசாயனஉர-கனநீர் உற்பத்தித் திட்டத்துக்கு, நியூயார்க்கைச் சேர்ந்த "மெஸ்ஸர்ஸ் விட்ரோ எஞ்சினியரிங் டிவிஷன்" என்னும் ஸ்தாபனத்தை இந்திய சர்க்கார் தொழில்நுட்ப ஆலோசகர்களாக நியமித்துள்ளனர். அத்திட்டத்துக்கு 22 கோடி ரூபாய் செலவு பிடிக்குமென்றும் மதிப்பிடப்பட்டிருக்கிறது.

நங்கல் தொழிற்சாலை ஆண்டுதோறும் 2 லட்சம் டன் அம்மோனியம் நைட்ரேட்டைத் தயாரிக்கும். அங்கே வருஷத்துக்குச் சுமார் 7.5 டன் கனநீரும் தயாரிக்கப்படும். இத்தொழிற்சாலை 1959 மார்ச் மாதம் வேலை துவங்கும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

### ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று

சோவியத் வர்த்தக ஸ்தாபனமொன்றுக்கும் இந்திய சர்க்காருக்கும் இடையே நவம்பர் 26-ந் தேதி கையெழுத்தான ஒரு ஒப்பந்தத்தின் கீழ், எண்ணெய் ஊற்றுக்களைக் கண்டுபிடிக்கும் திட்டத்தில் இந்தியாவுக்கு உதவி புரிவதற்காக 26 சோவியத் நிபுணர்கள் அடுத்த மாத மத்திவாக்கில் இந்தியாவுக்கு வந்து சேருவார்கள்.

இந்த 26 நிபுணர்களடங்கிய கோஷ்டியில் பூமியதிர்ச்சி ஆராய்ச்சி நிபுணர்கள் 15 பேரும், புவிக்கவர்ச்சி-காந்த சக்தி ஆராய்ச்சி நிபுணர்கள் 11 பேரும் இருப்பார்கள். இத்திட்டத்துக்கு மொத்தம் சுமார் 14 லட்ச ரூபாய் செலவாகுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

### இந்தியாவுக்கு சீன செஞ்சிலுவைச் சங்கத்தின் நன்கொடை

சீனாவின் தேசிய செஞ்சிலுவைச் சங்கத்தின் தலைவர் மாடம் லி டெஹ்குன், அந்த சங்கத்தின் சார்பில், இந்தியாவில் வெள்ள நிவாரண வேலைகளுக்குப் பயன்படுத்தப்படுவதற்காக இந்திய செஞ்சிலுவைச் சங்கத்துக்கு 57,500 ரூபாய் நன்கொடை அனுப்பியிருக்கிறார்.

[5ம் பக்கத் தொடர்ச்சி]

இயற்றிக் கொண்டு போகிறார்கள். இங்கும் இவர்களுக்கு ஏமாற்றம்தான் கிடைக்கும். சமீபத்தில் ஒரு அறிக்கையில் நான் கண்ட ஒரு புள்ளி விபரம் நினைவுக்கு வருகிறது.

திருச்சி ஜில்லாவில் ஜன கணிதத்தின்படி இருபத்து ஒன்பதரை லட்சம் ஜனத் தொகை. இவர்களில் 14 லட்சம்பேர் ரயத்வார் பட்டா தார்கள். இரண்டரை லட்சம் பேர் குத்தகைதார்கள். நான்கு லட்சம் பேர்தான் இந்த 'விவசாயிகள்' நியாய வார சட்டம் 14 லட்சம். ரயத்வாரி பட்டாதார்களின் உரிமையையும் நிர்வாக பாத்யதையையும் இரண்டரை லட்சம் குத்தகைதாரர்களுக்கு மாற்றி விடுகிறார்களே யல்லாமல், இந்தச் சட்டத்தால் யாருடைய நிலைமையை உயர்த்தி உதவ சர்க்கார் விரும்பினார்களோ அந்த விவசாய உழைப்பாளிகள் 4 லட்சம் பேருக்கு ஒரு பயனுமில்லை. 14 லட்சம் பட்டாதார்கள் இரண்டரை லட்சம் குத்தகை தார்களுக்குக் கிழாக்கப்படுவார்கள். அதாவது 4 லட்சம் உழைப்பாளிகள் பல்வேறு கட்சிக்காரர்கள் வலையில் சிக்கிச் சிதறிப் போக, 14 லட்சம் பட்டாதார்கள் சர்க்காருக்கு முதல் நம்பர் விரோதிகளாவதுதான் இதன் விளைவு இந்தச் சட்டத்தினால் பலரையும் இரண்டரை லட்சம் குத்தகைதார்களும் பற்பல கட்சிகளைச் சேர்ந்து கொள்வார்கள் என்பதும் சாத்தியமே. 14 லட்சம் பேர் ஆளும் கட்சிக்கு எதிராக ஆங்காங்கு திரண்டெழுவதுடன், பாதிக்கப்பட்ட இவர்களிடமிருந்து முழு வசூலையும் பெற முடியாத நிலையும் அரசாங்கத்திற்கு ஏற்படும். வரப்போகும் தேர்தலில் எவ்வளவு நெருக்கடிகளை சமாளிக்க வேண்டிய நிலை காங்கிரஸ் அரசாங்கத்துக்கு ஏற்படு மென்பதை எளிதில் யூகிக்கலாம்.

அரசியல் சாஸனத்தில் உடமைகளுக்கும் உரிமைகளுக்கும் உத்திரவாதம் செய்யப்பட்டிருக்க உடமையில் தலையிடும் இந்த சட்டத்தைக் கொண்டுவர எப்படித் துணிந்தார்களோ? இது அடிப்படை உரிமைகளுக்குப் புறம்பல்லவா? ஒழுக்காக் கேடானதும் அல்லவா?

அரசாங்கத்தை எதிர்க்கும் என்னுடைய இன்றைய போக்கு நீங்கள் அறிந்தது தான். ஆனால் ராஜ்ய சர்க்காருடன் எனக்கு யாதொரு விவகாரமும் இப்போதில்லை. எனினும் என் மனதில் பட்டதைச் சொல்ல விரும்புகிறேன். இன்றைய ஆடம்பரச் செலவுகளை குறைத்து மக்களிடையில் பரஸ்பர ஒற்றுமையை வளர்த்தால் வரிப் பளுவில்லாமல் அரசாங்கத்தை நடத்த முடியும் என்று ஒரு பெரியார் கூறியிருப்பது நினைவுக்கு வருகிறது.

எனக்கு ஒன்று தோன்றுகிறது. சமுதாயமாக நிலங்களை அவரவர் உரிமைப்பரப்பு அடிப்படையில் பங்குகளாக வைத்து கூட்டுறவுப் பண்ணைகள் தொடங்குவதே நிலப் பிரச்னை தீரவழி. விளைவை உழைப்பவர்க்கு ஒரு பங்கு உடமையாளர்க்கு ஒரு பங்கு. வரி அபிவிருத்திச் செலவுக்கு மற்றொரு பங்காக வழங்கலாம். இப்படிப் பங்கிடும் ஏற்பாட்டை கடந்த 25 ஆண்டுகளாக எனது பல்வேறு ஸ்தாபன ஏற்பாடுகளில் அமுலாக்கிப் பார்த்த அனுபவத்தில் இதைக் கூறுகிறேன். அங்கு ஒருவிதமான சிக்கலோ வேலை நிறுத்தத் தொல்லையோ ஏற்பட்டதில்லை. யாருக்கும் மனக் கசப்பும் சங்கடமுமின்றி அரசாங்கம் கொண்டுவரக்கூடிய சிறந்த ஏற்பாடு இதுவாகத் தான் இருக்க முடியும்.

அமெரிக்க கலிபோர்னியாவில் இத்தகைய பண்ணைகளில் வேலை நிறுத்தம் போன்ற தொல்லைகள் மறைந்து உற்பத்தி மூன்று அல்லது நான்கு மடங்கு உயர்ந்திருக்கிறது. இத்தகைய ஒரு நல் வழியை வகுத்தால் அரசாங்கச் சட்டங்கள் அவசியமில்லாமலும் பயனற்றும் போகுமாறு செய்துவிடலாம். இது போன்ற திட்டம் அமுலாக்கப்படும் நாடுகளைப்பற்றி இத் துறையில் ஆராய்ச்சி மிக்க அறிஞர் டாக்டர் வி. கே. ஜான் அவர்கள் ஒரு சமயம் என்னிடம் கூறினர். இதுவே நமது நாட்டிலும் உடமையாளர் உழைப்பாளர் யாருக்கும் முரண்பாடற்ற ஒரு நல்ல ஏற்பாடாக இருக்கும்.

நிலங்களைத் துண்டுகளாகச் சிதறடிப்பது உற்பத்திக்கு ஏற்றதல்ல என்பது தெளிவான விஷயம். கூட்டுறவு முறையில் உற்பத்தி பெருகவும், உடமையாளரும் உற்பத்தியாளரும் பயனடையவும் கூடும். ஜர்மனி, ஸ்வீடன், அமெரிக்க ஐக்ய நாடுகள் போன்ற பல நாடுகள் இந்த முறையின் வெற்றிக்கு சான்றுகளாக இருக்கின்றன.

உடமையாளரின் ஒத்துழைப்பின்றி உழைப்பாளிகள் மட்டும் உற்பத்தியைப் பெருக்கி விட இயலாது. இன்றைய நிலையில் உடமையாளர்களை வெளியேற்றிவிட்டு உழைப்பாளிகளுக்கு வேண்டியது உதவி. இதைச் சாதிக்கும் ஆற்றலும் அரசாங்கத்துக்கு இல்லை.

இந்த ஏற்பாடு ஒத்துவரவில்லையானால் உள்ள வழியெல்லாம் நிலக்காரர்கள் சட்ட சபைகளைக் கைப்பற்றுவதும்போராடுவதும்தான். உரிமைகளைப்பறித்துக்கொண்ட அரசாங்கத்துக்கு வரி செலுத்த நீதமில்லை என்று சிலர் கூறினர்கள், தங்கள் இடைவிடாத உழைப்பாலும் பொருளாலும் வளப்படுத்திய நிலங்களின்மீது தங்களுக்குள்ள உரிமை பறி போகும்போது இந்தக் கட்சி ஒரு வகையில் சரிதான். ஆனால் வேறு வழிகள் முற்றிலும் அடைபடாத வரையில் இதைப்பற்றி எண்ணவேண்டியதில்லை.

நிர்வாக அனுபவமும் மனோதத்துவ சக்தியும் படைத்த தலைவர் பி. டி. ராஜனுடைய ஆதரவின்கீழ் மிராசுதார்கள் நன்கு சிந்தித்து நடப்பார்களாக.

---

# மாணவர் துணைப்படை

இப்போது இந்தியாவின் கல்வித் திட்டத்தில் மாணவர்களுக்கு சில உதவிப் பண்பும், கூட்டு உழைப்பு மனப்பான்மையும், நற்குணமும், ஒழுங்குக் கட்டுப்பாடும், தலைமை வகிக்கும் ஆற்றலும் ஏற்படுவதற்கு வழி செய்கிற அம்சங்கள் வரவர அதிகமாக வற்புறுத்தப்பட்டு வருகின்றன. குணபாவம் உருவாகிற இளமைப் பருவத்திலேயே அவை நன்கு படிந்துவிட வழி செய்வது அவசியம் என்பது உணரப்படுகிறது. இந்த அடிப்படைப் பண்புகள் ஏற்படுவதற்கு வழிசெய்கிற தேசிய மாணவர் படை (நேஷனல் கேடெட் கோர்) நடவடிக்கைகள் பலப்படுவதற்கு மாணவர் துணைப் படையிலுள்ள (ஆக்ஸிலியரி கேடெட் கோர்) பெண்களும் பையன்களும் சென்ற மூன்று வருஷ காலமாகச் செய்து வந்துள்ள பணி வழி செய்திருக்கிறது; அத்துடன், அவர்கள் கிராமாந்தரங்களில் செய்துள்ள சமூக நலப் பணிகள் மூலம் கிராமாந்தரங்களில் ஒரு புது விழிப்பும் ஏற்பட்டு வருகிறது.

தேசிய மாணவர் பாடத் திட்டம் ஏற்பட்டது முதலே அது எல்லாராலும் நன்கு வரவேற்கப்பட்டிருக்கிறது; அது ஆரம்பமான சில வருஷங்களுக்குள்ளாகவே தேசத்தின் பல பகுதிகளிலும் உள்ள கல்வித்துறை அதிகாரிகள் தங்கள் தங்கள் கல்வி நிலையங்களில் இன்னும் அதிக அளவில் அப்படை அணிகளை ஏற்படுத்த வேண்டும் என்றும் அதற்கு அதிகத் தொகைகள் ஒதுக்கித் தரவேண்டும் என்றும் வற்புறுத்தத் தொடங்கிவிட்டார்கள். ஆனல் அவர்களின் கோரிக்கைகளில் ஒரு சிறு பகுதியைத்தான் பூர்த்தி செய்ய நமக்கு வசதி இருந்தது. துரித அபிவிருத்திக்குப் பணமுடை தடங்கலாகஇருந்தது. எனவே தேசிய மாணவர் படையில் சேர்ந்துகொள்ள வசதியிருந்த எண்ணிக்கையைவிட ஏராளமான அளவில் மாணவர்களுக்கு ஒழுங்குக் கட்டுப்பாட்டுணர்ச்சியும் குடிமைப் பயிற்சியும் அளிக்கத் தக்கதும், பணச் செலவு குறைந்ததுமான ஒரு திட்டத்தைஉருவாக்குவதுஅவசியம் என்று இந்திய சர்க்கார் கருதினர்கள்.

### துணைப் படை

இதை அனுசரித்து 1953-ல் மாணவர் துணைப் படை ஏற்படுத்தப்பட்டது. தேசிய மாணவர் படைக்கு அது உப அங்கமாக அமைக்கப்பட்டது. அதை ராணுவப் பயிற்சி அணி என்று கூற முடியாது. ஏனென்ருல் அது ஆயுத உபயோகப் பயிற்சி அளிப்பதில்லை. மத்திய சர்க்கார் அந்தப் படைக்குப் போதனையாளர்களை அளித்துப் பொது மேற்பார்வை செய்யும் பொறுப்பை மாத்திரமே ஏற்கிருர்கள். பலர் ஒன்று சேர்ந்த ஒரு படையைச் சேர்ந்தவர்கள் என்ற முக்கியமான உணர்ச்சி மாணவர்களுக்கு ஏற்படும்படி செய்வதற்காக, அதில் சேருபவர்கள் சொற்ப நிலையுள்ள படைஉடை (யூனிபார்ம்) அணிவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்தச் செலவை மாணவர்களோ கல்வி நிலையங்களோ ஏற்க வேண்டும்.

### நோக்கம்

மாணவர் துணைப்படை லட்சியங்களும் நோக்கங்களும் பின்வருவன ஆகும்—

இளைஞர்கள் உடல், உள்ளம், ஒழுக்கம் ஆகிய மூன்று அம்சங்களிலும் நல்ல வளர்ச்சி பெறும்படி செய்து, அவர்கள் நற்பண்புள்ளவர்களாகவும், தலைமை தாங்கும் ஆற்றல் உள்ளவர்களாகவும் பரிணமித்து சிறந்த தேசப் பிரஜைகளாக ஆவதற்கு வழி செய்வது;

இளைஞர்கள் மனதில் தேசப்பற்று உணர்ச்சியை உண்டு பண்ணுவது.

இளைஞர்களுக்கு, கூட்டுணர்ச்சி, நன்னம்பிக்கை, சேர்ந்து வாழ்தல்; சுய முயற்சியில் நம்பிக்கை ஆகிய பண்புகள் ஏற்படும்படி செய்து அவர்களுக்கு சமூக சேவைப் பயிற்சி அளிப்பது;

இளைஞர்கள் உடல் உழைப்பின் மேன்மையை உணரும்படி செய்வது.

மாணவர் துணைப்படையின் அடிப்படைப் பிரிவு "ஸெக்ஷன்" என்று குறிப்பிடப்படும்: அதில் பிரிவுத் தலைவரும்(ஆசிரியர்–அதிகாரி) 50 மாணவர்களும் இருப்பார்கள். ஒரு நிலையத்தில் ஒன்றுக்கு அதிகமான அணி இருந்தால், அந்த அணிகளில் 2–4 அணிகளுக்கு ஒரு டெப்புட்டி குரூப் கமாண்டர் இருப்பார்; பெரிய ஆசிரியர்ஒருவர் அப்பதவியை வகிப்பார்; நான்குக்கு மேற்பட்ட அணிகள் குரூப் கமாண்டர் அதிகாரத்தில் இருக்கும். பெரிய ஆசிரியர் ஒருவரே அப்பதவிக்கு நியமிக்கப்படுவார். குரூப் கமாண்டர், டெப்புட்டி குரூப் கமாண்டர் ஆகியவர்களை ராஜ்ய கல்வி இலாகா அதிகாரிகளுடன் வைத்துக் கொண்டுதான் நியமிக்கவேண்டும். மாணவர் துணைப் படையின் சகல பிரிவுகளும் அதிசமீபத்திலுள்ள தேசிய மாணவர் படையின் ஸீனியர் டிவிஷன் அணியுடன் (ராணுவ அணி) இணைக்கப்பட்டிருக்கும். மேற்பார்வை, பயிற்சி ஆகியவை திறம்பட நடப்பதற்கே இந்த இணைப்பு.

### சமூக சேவை முகாம்கள்

ஒவ்வொரு வருஷமும் பத்து நாட்களுக்கு மாணவர் துணைப் படை ஆசிரியர்களும் மாணவர்களும் தொழில் முகாம், சமூக சேவை முகாம் ஆகியவைகளில் பங்கெடுக்கவேண்டும். ரஸ்தா அமைப்பு, குளத்துப்புரவு, சுகாதார நடவடிக்கைகள், பஞ்சம், வெள்ளம் முதலியவை கண்டுள்ள பிரதேசங்களில் கஷ்ட நிவாரண வேலை, பள்ளி வகுப்பு நடத்துதல், நூல் நிலையங்கள், தகவல் நிலையங்கள், மருத்துவ நிலையங்கள் முதலியவைகளை அமைத்தல் ஆகிய சமூக சேவை நடவடிக்கைகளில் அவர்கள் அப்போது ஈடுபடுவார்கள்.

1954—55-ல் மொத்தம் 56 சமூக சேவை முகாம்கள் நடத்தப்பட்டன; 711 ஆசிரியர்களும் 28,518 மாணவர்களும் கலந்து கொண்டனர். 1955—56-ல் 138 முகாம்கள் நடந்தன; 2,237 ஆசிரியர்களும் 60,007 மாணவர்களும் கலந்துகொண்டனர். 1955–56 நிதி வருஷத்துக்குப் பிறகும் பல முகாம்கள் நடந்துள்ளன: இந்த சேவை முகாம் நடவடிக்கைகளின் பிரதான அம்சம் என்னவென்ருல், அந்தந்த சேவை ஸ்தலங்களில் என்ன விதமான சேவை அவசியம் என்று தெரிந்து அந்த



சேவை செய்யப்படுகிறது. வெள்ள நிவாரண வேலை முகாம்களில், மாணவர்களின் சேவையைக் கண்ட கிராமவாசிகள் தாங்களும் சேர்ந்து மண்வெட்டி, பிக்காச்சு எடுத்து வேலை செய்ய முன்வந்து விட்டார்கள்.

மாணவர் துணைப் படை முதலில் 5,100 மாணவர்களுடன் ஆரம்பிக்கப்பட்டது. அதன் முக்கியத்துவத்தைக் கல்வித் துறையினரும் பெற்ருேரும் சீக்கிரமே உணர்ந்து அதில் அதிக மாணவர்களைச் சேர்க்க முன்வந்தார்கள். 1953—54-ல் அதில் 66,339 பேர் இருந்தார்கள்; 1954—55-ல் 4,72,672 பேர் சேர்வதற்கு வசதியாக அது விஸ்தரிக்கப்பட்டன. 1955–56-ல் அது மேலும் விஸ்தாரமடைந்தது. 6,19,157 பேர் இருந்தார்கள், 1956—57 இறுதி வாக்கில் சுமார் 8 லட்சம்பேர் அதில் இருப்பார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

மாணவர் துணைப்படையை உருவாக்குவதில் ஒவ்வொரு ராஜ்யத்துக்கும் ஆரம்ப கஷ்டங்கள் இருக்கத்தான் செய்தன. இப்போது ஸ்திர நிலை ஏற்பட்டுவிட்டது. தேசத்தில் உள்ள ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் அதன் அணி இருக்கவேண்டும் என்ற லட்சியம் நிறைவேறி வருகிறது. இப்படைகளில் பெண்களும் வலிய வந்து சேர்வதற்கு முன்வருவது மிகவும் உற்சாகமூட்டக்கூடிய அம்சமாகும்.

—

# பட்டமளிப்பு விழாப் பேருரை

(சென்ற வாரத் தொடர்ச்சி)

பல நாடுகளின் மதிப்பை இந்தியா பெற்றிருப்பதாகவும், இங்கு நடைபெறும் மக்களாட்சிமுறை பற்றிய சோதனைகளை உலகனைத்தும் கூர்ந்து கவனித்து வருவதாகவும், உலக நாடுகளிடையே நமக்கு இருந்துவரும் மதிப்பு நீடித்திருக்க வேண்டுமானால் இந்தச் சோதனையில் வெற்றி பெற நாம் முயல வேண்டுமென்பதுவே மேற் கூறியவற்றிலிருந்து தெளிவாகின்றன.

பாராளுமன்றத்தின் வாயிலாக நிகழும் மக்களாட்சி முறை நன்று நடைபெற வேண்டுமானால் இரண்டு கட்சிகள் இருக்கவேண்டும்; ஆற்றல் நிறைந்த எதிர்க்கட்சியும் செயல்படவேண்டும். ஒரே கட்சி அரசியலை நடத்துவதென்பது இயலும்; ஆனால் எதிர்க்கட்சி இல்லாது போமேயானால் ஒருகட்சியே நடத்தும் ஆட்சி குறிப்பிட்ட சிலரால் நடத்தப்படும், ஏகாதிபத்தியமாகக் குன்றிவிடக்கூடும். வேறுபட்ட கட்சிகளின் அரசியல் திட்டங்களின் நலந்தீங்குகளை ஆராய்ந்து அவற்றின் மீது முடிவு கூறும் வாய்ப்பை வாக்காளர்களுக்கு வழங்குவதற்காக குறித்த காலங்களின் இறுதியில் பொதுத்தேர்தல் நடத்தப்பெறுகிறது. மாற்றுத் திட்டங்களை மக்களுக்கு முன் வைக்காவிடில் தேர்தல் முறையானது பயனற்றதாய் விடும். ஆங்கிலேயே பாராளுமன்ற குடியரசாட்சியும், அமெரிக்க தலைவரைக் கொண்ட குடியாட்சியுமாகிய இரண்டும் இருதரப்பட்ட கொள்கைகளைக் கொண்ட கட்சிகளின் அமைப்பை அடிப்படையாகக் கொண்டவை. இந்தியக் குடியரசு ஆட்சியின் வளர்ச்சிக்கு வன்மை பொருந்திய எதிர்க்கட்சி ஒன்று இன்றியமையாதது என்று நம் அரசியல் தலைவர்களும் கூறுகிறார்கள். அரசியலமைப்பின்படி நேரிய முறையில் உயர்ந்த கொள்கைகளைக் கொண்ட ஒரு எதிர்க்கட்சி நம் அரசாங்கத்திற்கு இன்றியமையாததொன்று. ஆனால் அப்படிப்பட்ட அரசியல் எதிர்க்கட்சி ஒன்றுஉருவாகாததற்கு வருந்தவேண்டியிருக்கிறது. ஒரு கட்சியானது மற்றொரு கட்சியைவிட உயர்ந்ததும் உண்மையானதுமாகிய கொள்கையும், அரசியல் திட்டங்களும் உடையதாய் அமையவேண்டுவது மிகஅவசியம். அரசியல் கட்சிகள் அனைத்தும் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டும், அதிகார வரம்பை மீறாமலும் அரசியல் சட்டப்படி நடக்கக் கடமைப்பட்டுள்ளன. மேலிடத்தார் அரசியலமைப்பின்படிச் செய்யும் எந்தத் திட்டத்தையும், அவ்வமைப்புக்கு முரணாகப் பலாத்கார வழியில் அதனை மாற்ற முயற்சிப்பது எந்த உண்மையான அரசியல் கட்சிக்கும் பொருத்தமாகாது. ஆனால் நம் நாட்டில் அண்மையில் நிகழ்ந்ததும், நிகழ்ந்து கொண்டிருப்பதுமான பல முரண்பட்ட செயல்கள் மக்களாட்சி முறையையே கலகலக்கச் செய்யுமோ என்ற ஐயம் எழுகிறது. மக்களாட்சியில் சிறந்த குடிமகனாய் வாழ்வதற்குரிய உண்மைக் கல்வியை அவர்களுடைய உள்ளத்தில் போதிப்பதே இக்குறைகள் நிகழாதிருப்பதற்குரிய சிறந்த கழுவாயாகும்.

பொதுமக்களுக்கு அரசியற் பயிற்சியளிப்பது மக்களாட்சியின் முக்கியமானதொரு பணியாகும் என்பது குறிப்பிடத்தக்கது. இந்தப்பணியை நாட்டிலுள்ள அரசியற் கட்சிகள் மேற்கொள்ள வேண்டும். இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் இத்தகைய பயிற்சி அளிக்கப்படுவதைப் போல நமது நாட்டில் இன்னும் அளிக்கப்படவில்லை. பாராளுமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் தேர்தல் நெருங்கி வரும் நேரத்தில் மட்டும் அல்லாமல், எக்காலத்திலும் தத்தம் தொகுதி மக்களோடு தொடர்பு கொண்டு, தம் கொள்கையை எடுத்துக் கூறி, அத்துடன் அவர்களுக்கு அரசியல் அறிவை ஊட்ட வேண்டும். பொதுமக்கள் மேம்பட்ட அறிவு நிலையை அடைய வேண்டுமானால் அது காலப் போக்கில்தான் இயலும். இது எந்த நாட்டிலும் உள்ள அரசியல் கட்சிகளின் தலையாய பொறுப்பாகின்றது. இந்த அரசியல் கட்சிகள் முதற்கண் நாட்டின் அரசியல் சட்டத்தைப் பற்றியும்; பின்னர் மக்களது உரிமை, கடமை ஆகியவற்றைப் பற்றியும் பயிற்சியளிக்கவேண்டும். அமெரிக்க அரசியல் சட்டத்தை வகுத்தவர்கள் அதனை மக்கள் முன்னர் படைக்கு முன், இக்கடமையையே முதலில் மேற்கொண்டார்கள். அமெரிக்காவின் தலைசிறந்த பத்திரிகைகளில் ஒன்றாக விளங்கிய "பெட்ரியலிஸ்ட்" மூன்று ஆண்டு காலத்திற்கு மேலாக, அரசியலமைப்பைப் பற்றியே தொடர்ந்து பயிற்சியளித்து வந்தது. அமெரிக்கக் காங்கிரசு அந்த அரசியலமைப்பை ஏற்றுக்கொண்டது, ஆய்ந்தறிந்த பொதுமக்களின் பேராதரவைப் பெற்றதன் பின்புதான். ஆனால் இந்தியாவிலோ, அரசியல் சட்டம் அமைக்கப் பட்டதிலிருந்து நமது மக்களுக்கு அத்தகைய அறிவு புகட்டப்பட்டதாகத் தெரியவில்லை.

சட்டத்தில் வரையறுக்கப் பெற்றதை முடிந்த முடிபு என்று ஏற்றுக் கொள்வதும், சட்டத்தையும் சட்ட இயக்குனரையும் மதிப்பதும் மக்களாட்சி வெற்றிகரமாக முன்னேறுவதற்கு உறுதுணை செய்யும் மற்றொரு அம்சமாகும். இதைத்தான் அண்மையில் மதிப்பிற்குரிய ஜட்ஜ் இராசகோபாலன் இதே மேடையில் இருந்து வலியுறுத்தினார். இந்த சட்டத்திற்கும் இயக்குனருக்கும் பொதுமக்கள் பெருமதிப்பு அளிக்காதவரை ஒரு நாட்டில் மக்களாட்சி சிறந்து விளங்க வழியே இல்லை. தவறான வழியில் கொண்டு செலுத்தப்பட்ட மக்களாட்சிகள் எல்லாம் இறுதியில் தனிப்பட்ட ஒரு தலைவர் அல்லது சர்வாதிகாரியின் கொடுங்கோலுக்கு இரையாகின்றன. அதன் விளைவு மக்களுக்கு நாசமே. நிலை நாட்டப் பெற்று அமுலில் இருந்து வருகின்ற சட்டங்களையும், மரபு முறைகளையும் மீறி நடக்கத் துணிவோருக்கு ஜெர்மனியும், இத்தாலியும் பெரும் எச்சரிக்கை செய்வனவாக அமைகின்றன.

(தொடரும்)

---

(4ம் பக்கத் தொடர்ச்சி)

டுச் சங்கத்தின் அடிப்படையாய் சமாதானத்தை அவை நாடுவதாயின் இவ்விதம் பலாத்கார சாதனங்களைப் பெருக்குவானேன்? ஆங்கிலப் பழமொழியொன்றுண்டு; 'கடவுளை நம்பு, ஆனால் துப்பாக்கி மருந்தையும் நனையாமல் வைத்திரு' என்று. அதே போன்று உலக நாடுகள், ஐக்கிய சபையில் நியாயம், சமாதானம் இவைகளைப் பேசலாம், ஆனால் படைபலத்தைப் பெருக்கிச் செல்ல வேண்டும் என்ற முடிவுடன் இருக்கின்றன. எகிப்தை ஆக்ரமித்தவர், ஏதோமரியாதையுடன் விலகுவர். ஆயின் ருசியா ஹங்கேரியை விட்டு விலகப் போகின்றதா? ஐக்கிய சபையின் தீர்மானம் அவ்வளவு வலுவு பெற்று இருக்கின்றதா? இல்லை. வாய்ப் பேச்சு வீரர்களை உலகம் எவ்வளவு பாராட்டலாம்?

சபைகளும் தீர்மானங்களும் மனிதர்களை கட்டுப்படுத்த வேண்டும். அவைகளை ஏற்று அவைகளுக்குப் பணியவேண்டிய நியாய உணர்ச்சி மக்களிடம் உள்ளதா? இல்லை. அதை வளர்க்க முயற்சிகளும் இல்லை. மனிதன் இன்று, பேராசை பெருமிதம் பிடித்து மயங்குகின்றான். உலோகாயதம் அவனைக் குருடனாக்கி விட்டது. சீலம் என்றொன்றுண்டு என்பதையும் அவன் அறிவதில்லை. இந்நிலையில்-அவன் தன்னையே நிலையிலமர்த்திக்கொள்ள முடியாத பொழுது-அவனை உலகை சீரமைக்க வலுப்பெற்றவன் என்பதாகக் கொள்வது ஏமாற்றத்திலே முடியும். தன்னிறைவை, முதலில் நாடிப் பெற்றவனே பிறருக்கு வழிகாட்ட தகுதிபெறுவான். அவன் வாய்ச்சொல்லிற்கு மதிப்பும் வலிவும் உண்டு. அவ்வழி உலக மக்கள் அனைவரும் முனைந்தால் அவர்களுக்குள் விவகாரங்களும் பைசல்களும் வேண்டுவதில்லை. யுத்தம் சரித்திர சம்பவமாகிவிடும். எங்கும் நிறைவும், அமைதியும் நிலவும். அப்பொழுது ஐக்கிய நாடுகளின் சபை இருப்பதுவும் நல்லது, இல்லாதிருந்தாலும் பழுதில்லை. இன்று உள்ள நிலையை அது மறைக்கவே உதவுகின்றது. ஆயின் உண்மையை நீண்ட காலத்திற்கு மறைத்து வைப்பது கூடுவதன்று.

[2ம் பக்கத் தொடர்ச்சி]

ஸைப் படங்கள், ஸ்தலக் காட்சிகள் முதலியவை இருக்கின்றன.

பிற்கால மொகலாயச் சித்திரங்கள் அந்தக்கால அரசர்களும், பிரபுக்களும் ஓய்வையும் பொழுது போக்கையும், உல்லாசத்தையும் மாத்திரமே விரும்பிக் காலங்கழித்ததை நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

ராஜஸ்தானின் பஹாரி சித்திரப் பிரிவில், ராஜஸ்தான் மால்வா, புந்தேல்கண்ட், காங்க்ரா ஆகிய இடங்கள் மொகலாயத் தொடர்பு ஏற்பட்ட பின் தங்களுக்கென தனிப்பட்ட ஒரு சித்திர மரபை ஏற்படுத்திக் கொண்டிருப்பதைக் காட்டும் சித்திரங்கள் உள்ளன. காதல் காட்சிகளுக்கும், எனமல் போன்ற வர்ணங்களும் உள்ள சித்திரங்களை அந்தப் பிரிவு விசேஷமாக உருவாக்கியிருக்கிறது. தக்காணச் சித்திரங்களிலும் இதே போக்குத் தான் இருக்கிறது.

ஜவுளிப் பிரிவில் ஏராளமான காட்சிப் பொருள்கள் இருக்கின்றன, ராஜஸ்தான் குஜராத் சாயமுறை (டைடையிங்), குஜராத் மணப்பெண்கள் உடுத்தும் 'படோலா' ஸாரி ரகங்கள், 17ம் நூற்றாண்டைச் சேர்ந்த தஞ்சாவூர்ப் புடவைகள், சூரத் அஹமதாபாத், ஔரங்கபாத் காசி பட்டு ஜரிகைப் புடவைகள், கட்ச் 'எம்பிராய்டரி' பூ வேலை உடைகள், காஷ்மீர் சால்வைகள் முதலியவை இருக்கின்றன.

ஆயுதங்கள் காட்சி அறையொன்று தனிப்பட இருக்கிறது. அதில் முழு அங்கிக் கவசங்கள், வாள், வட்ட கேடயம், குத்து ஈட்டி, கத்தி, பழங்காலத் துப்பாக்கி முதலிய எண்ணற்ற படைக்கலங்கள் இருக்கின்றன. சில அரிய வேலைப்பாடுகளுள்ள ஆயுதங்களும் உள்ளன. அக்பரின் கேடயத்தில் வானமண்டல ராசிகள் தீட்டப்பட்ட சித்திரம் காணப்படுகிறது. சரித்திர மாணவர்களுக்கு அலாவுதீன் கில்ஜீ, ஷாஜஹான், ஔரங்கசிப் ஆகியோர் உபயோகித்த வாள்கள், அக்கரையூட்டும் அம்சங்களாகும்.

## உலோக வேலைப் பிரிவு

ஏராளமான வெள்ளி சாமான்கள் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. ஹுக்கா கிண்ணங்கள் அஞ்சறைப்பெட்டி பன்னீர்ச் செம்பு முதலிய 18–19ம் நூற்றாண்டுக்கால சாதனங்கள் இருக்கின்றன. எனமல் ஹுக்கா கிண்ணங்களில் வேட்டையாடும் காட்சிகளும், சித்திர வேலைகளும் காணப்படுகின்றன. அவை 18ம் நூற்றாண்டுக் காலத்திய லக்னோ வேலையாகும்.

காஷ்மீர், பஞ்சாப் ஆகிய இடங்களில் செய்யப்பட்ட ஈயம் பூசின உலோக வேலைப் பொருள்களும் உள்ளன. கூஜா, பெட்டி, பேழை, பீரோ தாம்பாளம் முதலிய பல பொருள்கள் பலவிதச் சித்திர வேலைப்பாடுகளுடன் இருக்கின்றன. லாகூர், சியால்காட் குஜராத் ஆகிய இடங்களிலிருந்து சேகரிக்கப்பட்ட உலோகப் பொருள்களில் விசேஷ சன்ன வேலைப்பாடுகள் காணப்படுகின்றன. உருக்குத் தகடுகளில் பொடியாகக் கொடி வேலைகள் செதுக்கப்பட்டுப் பிறகு அவைகளில் தங்க, வெள்ளிக் கம்பிகள் அழுத்திப் பதிக்கப்பட்டுள்ளன.

பிதாரில் தயாரிக்கப்பட்ட பித்ரி பொருள்களில் ஹுக்கா கிண்ணங்கள், அஞ்சறைப் பெட்டிகள், படிக்கம் முதலிய உபயோகப் பொருள்கள் இருக்கின்றன. அவைகளில் வெள்ளி வைத்து இழைக்கப் பட்டிருக்கிறது. செம்பு, ஈயம் ஆகியவை சேர்ந்த கலப்பு உலோகத்தால் அவை தயாரிக்கப்படுகின்றன. கஞ்சா செடி, 'டயமண்ட்' முதலிய உருவங்கள் தான் பிரதான சித்திர உருவங்களாக இருக்கின்றன.

செம்பு, பித்தளைச் சாமான்களில் சில விசேஷ வேலைப்பாடுள்ள பொருள்கள் உள்ளன. பித்தளைப் பேழையில் பல அடுக்கு மூடி இருக்கிறது. அதில் பல்வேறு ஜைன சின்னங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. பேழையின் உடல் பாகத்தில் வேட்டைக் காட்சி ஒன்று காணப்படுகிறது. குரான் வாசகம் உள்ள கோப்பை ஒன்று மொகலாய காலக் கைவேலைத் திறனுக்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறது. மொகலாயர் கால "ஜேட்" பொருள்களும் ஏராளமாய் இருக்கின்றன.

தற்கால கோட்பாட்டின்படி ஒரு பொருட்காட்சிச் சாலையானது குறிப்பிட்ட நோக்க வரம்புக்குட்பட்டதாக இருக்க வேண்டும். ஆனால் பல பொருட்காட்சிச் சாலைகளில் அந்தக் கோட்பாடு அனுஷ்டிக்கப்படாமல் பல ரகமான பொருள்கள் வைக்கப்படுகின்றன. பம்பாய் வேல்ஸ் இளவரசர் பொருட்காட்சிச் சாலையும் இதற்கு விலக்கல்ல. ஆசியா, ஐரோப்பா ஆகிய கண்டங்களின் பல பகுதிகளிலிருந்தும் கிடைத்தற்கரிய சாமான்களையெல்லாம் ஏராளமாக வாங்கியபடியால் அங்கே புராதனப் பொருள்கள் குவிந்து கிடக்கின்றன. ஆனால் அவைகளில் பல பொருள்கள் வீடுகளில் அலங்காரப் பொருள்களாக வைக்கத் தகுந்தவையேயாகும். எனவே வேண்டாத பொருள்களை அகற்றிவிடுவதற்கு தர்மகர்த்தாக்கள் தீர்மானித்திருக்கிறார்கள். சில வருஷங்களுக்குள் அவ்வேலை பூர்த்தியாகி கலாச்சார ரீதியில் ஒழுங்கான பிரிவுகளை அமைப்பது சாத்தியமாகும். தொழில் துறைப் பிரிவு ஒன்றையும் ஆந்திர பாலஜிகல் பிரிவு ஒன்றையும் ஏற்படுத்த உத்தேசிக்கப்படுகிறது. தொழில் பிரிவு சிறப்பாகக் கல்வி போதனைக்கு வழிசெய்யும். ஏற்கனவே ஆந்திர பாலஜிகல் பிரிவு சிறு அளவில் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

## தஞ்சை செய்திக் கதிர்

தஞ்சையிலிருந்து வெளிவரும் மாவட்டச் செய்திப் பத்திரிகையான தஞ்சை செய்திக் கதிர் முதல் இதழ் வரப்பெற்றோம். பெருவுடையார் கோயில் காட்சியை மேலட்டையில் கொண்டு, நிறைந்த செய்திகளுடன் விளங்கும் இது கவர்ச்சிகரமாக அச்சிடப்பட்டிருக்கிறது. மாவட்டங்கள்தோறும் மக்கள் நலனுக்கு என்று இது போன்ற பத்திரிகைகள் தோன்றவேண்டும். தமிழுக்கு நல்ல எதிர்காலம் காத்திருக்கும்போது, இத்தகைய முயற்சிகள் வெற்றி பெறுவதில் என்ன தடை? தனிப்பிரதி அணா 2, ஆசிரியர்:- எம். ஆர். சாஸ்திரி, தபால்பெட்டி 36, தஞ்சை.

# கோர்ட் விளம்பரங்கள்

**வலங்கிமான் டி. மு. கோர்ட்**
O. S. 70/56

மேலவழுத்தூர் ஸ்ரீ கைலாசநாத ஸ்வாமி கோவில் டிரஸ்டி M. பக்கிரிசாமி மூப்பனர் —வாதி

பாபனசம் தாலுக்கா மேலவழுத்தூரில் மேல தெருவில் இருக்கும் மொய்தீன் ருவுத்தர் குமாரர் அப்துல் லத்திப் 1ம் பிரதிவாதி

ஷை 1ம் பிரதிவாதிக்கு

ஷை நம்பரில் வாதியால் மேன் கூரையை பிரித்து சொத்து சுவாதீனம் கிடைக்க தாவா செய்யப்பட்டு முதல் பிரதிவாதிக்கு சம்மன் சார் வாகாததால் ஒட்டி சர்வு செய்யவும் பப்ளிகேஷனுக்கும் உத்திரவாகி 15-12-56 ஈரங்கி போடப்பட்டிருக்கிறது.

R. கண்ணன் அய்யங்கார் B. A. B. L.
அட்வகேட்

**திருச்சி டி. மு. கோர்ட்**
S. C. 1739/56

தி. தா. திருவானைக்காவல் ஸ்ரீ ஜம்புகேஸ்வரர் தேவஸ்தானத்திற்காக எக்ஸிகியூடிவ் ஆபீசர் —வாதி

தி. தா. திருவளர் சோலை சின்னகண்ணு முத்திரியர் குமாரர் C. சுப்பிரமணிய முத்திரியர் —பிரதிவாதி

ஷை நெம்பரில் வாதி கொடுத்த நோட்டீஸ். ஷை நெ.ல் உமது பேரில் குத்தகை பாக்கிக்காக தாவா செய்து தாவா —12—56 தேதி ஈரங்கி போடப்பட்டிருப்பதால் அன்று ஆஜராகி கக்ஷியை சொல்லிக் கொள்ளாத பக்ஷத்தில் ஒரு தலைப் பக்ஷமாக தீர்ப்பு செய்யப்படும் என்பதை அறியவும்.

S. ரத்னம்
அட்வகேட்

**துறையூர் டி. மு. கோர்ட்**
O. S. 1127/56

பொன்ன போயன் —வாதி
வீர போயன் —பிரதிவாதி

ஷை நம்பரில் வாதி பிரதிவாதி பேரில் 4—9—56வ. எழுதிய புரோநோட்டுப்படி 370-7-0 கிடைக்க தாவா செய்து விசாரணைக்கு —12—56வ. வைக்கப்பட்டிருக்கிறது என்பதை தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

V. S. நரசிம்மய்யர்,
அட்வகேட்.

**கும்பகோணம் டி. மு. கோர்ட்**
S. C. 878/56

கும்பகோணம் பெரிய தெருவில் இருக்கும் A. R. ராஜகோபால செட்டியார் குமாரர் A. R. விச்வநாத செட்டியார் —வாதி

நாகபட்டிணம் அச்சு நாராயண பிள்ளை தெருவில் இருக்கும் பழனிசாமி பிள்ளை குமாரர் N. P. வெங்கடாஜலம் —பிரதிவாதி

ஷை பிரதிவாதிக்கு

உம்பேரில் வாதியால் பிருமிசரி நோட்டுப்படி ரூ 140/- அதற்கு பின் வட்டி வியாஜ்ய செலவுள்பட கிடைக்க பிருது செய்யப்பட்டு 24—12—56 ஈரங்கி போடப்பட்டிருக்கிறது. அன்று பகல் 10 மணிக்கு நீர் நேரிலோ வக்கீல் மூலமோ ஆஜராகாவிடில் உம்மையன்றி முடிவு செய்யப்படும்.

N. தியாகராஜன்
வாதி வக்கீல்

**துரையூர் டி. மு. கோர்ட்**
O. S. 438/56

சின்னசாமி போயன் -வாதி

வெள்ளைய முத்திரியன் 1, முத்துசாமி முத்திரியன் 2, வீர முத்திரியன் 3. பொன்னம்மாள் 4 —பிரதிவாதிகள்

1 to 3 பிரதிவாதிகள் தகப்பன் எழுதிக் கொடுத்த ஈட்டுப்பத்திரப்படி தாவாசெய்து 18—12—56 தேதி போடப்பட்டிருக்கிறது.

V. R. அவதானி
வக்கீல்

**குளித்தலை டி. மு. கோர்ட்**
S. C. 1336/56

அய்யாச்சாமி ரெட்டியார் —வாதி
ராமசாமி நாய்க்கர் —பிரதிவாதி

ஷை நம்பரில் வாதி பிரதிவாதி பேரில் புரோநோட்டுகள்படி ரூ 374—12—0-க்கு தாவா செய்து 18—12—56 தேதி வாய்தா போட்டிருப்பதால் அன்று ஆக்ஷேபணையை கோர்ட்டில் தெரிவித்துக் கொள்ள வேண்டியது.

K. திருவேங்கடாச்சாரியார்
வாதி வக்கீல்

**வலங்கிமான் டி. மு. கோர்ட்**
O. S. 195/56

கும்பகோணம் தாலுகா ஆடுதுரை செட்டித் தெருவிலிருக்கும் T. A. உதுமாற்சா ராவுத்தர் குமாரர் முகம்மது இஸ்மாயில் ராவுத்தர் —வாதி

ரஜாக்கு மொய்தீன் ராவுத்தர் வகையரா —பிரதிவாதி

ஆடுதுரை மெய்க்கற்பிள்ளையார் கோவில் தெருவிலிருக்கும் முகம்மதுசா ராவுத்தர் குமாரர்-அமீர் சுல்தான் ராவுத்தர் ஷை தெருவிலிருக்கும் கருப்பய்யன் சம்சாரம் இருளாயி —3-9 பிரதிவாதிகள்

ஷை நெ.வாதி வக்கீல் R. வெங்கட்ராமணி அய்யர் தெரிவிப்பதாவது ஷை நெம்பரில் வாதியால் பிராதில் கண்ட சொத்துக்களை நல இறப்பம் சரிக்கட்டி 8 பாகங்களாக பிரித்து 8ல் ஒரு பாகத்தை வாதிக்கு பிரித்து சுவாதீனம் கொடுக்கவும் மற்றும் வரும்படி முதலானதுகளும் கேட்டு தாவா கொடுக்கப்பட்டு 3, 9 பிரதிவாதிகளுக்கு ஒட்டி சர்வு செய்யவும் பப்ளிகேஷனுக்கும் ஆர்டராகி 10—12—56 ல் போடப்பட்டிருக்கிற விபரம் அறியவும்

R. வெங்கட்ரமணியய்யர்
அட்வகேட்

**குளித்தலை டி. மு. கோர்ட்**
S. C. No. 1284/56

ராஜா சுப்பிரமணிய குருக்கள் —வாதி
கார்த்திகேய குருக்கள் —பிரதிவாதி

வாதி பிரதிவாதி பேரில் புரோநோட்டுப்படி ரூபாய் 216-10-0 கிடைக்க தாவா செய்து 13-12-56வ. ஈரங்கி. அன்று பிரதிவாதி கோர்ட்டில் ஆஜராகாவிட்டால் Exparte தீர்ப்பு ஏற்படும்.

V. S. ராமரெத்தினம்,
அட்வகேட்

**குளித்தலை டி. மு. கோர்ட்**
S. C. No. 1300/56

பழனியாண்டி கவுண்டர் —வாதி
பழனியம்மாள் -பிரதிவாதி

வாதி பிரதிவாதி பேரில் புரோநோட்டுப்படி துகை ரூ. 450 கிடைக்க தாவா செய்து 19-12-56வ. ஈரங்கி அன்று பிரதிவாதி கோர்ட்டில் ஆஜராகாவிட்டால் Exparte தீர்ப்பு ஏற்படும்.

V. S. ராமரெத்தினமய்யர்,
அட்வகேட்.



Edited and Published by Tiruloka Sitharam for the Shivaji, Private Ltd, and Printed by A. V. R. Krishnasami at Kannan Press, Tiruchirapalli 2